# குதம்பை சித்தர்

## பாடல்





K. A. மதுரை முதலியார்,
ஷண்முகானந்த புத்தகசாலை, பார்க்டவுன், சென்னை.

இதன் விலை] 1954 [அணா 1.

உ

சிவமயம்.

# குதம்பை சித்தர் பாடல்.

—:(❀):—

வெட்டவெளிதன்னை
மெய்யென்றிருப்பார்க்கு
பட்டயமேதுக்கடி குதம்பாய்
பட்டயமேதுக்கடி 1



மெய்ப்பொருள்கண்டு
விளங்குமெய்ஞ்ஞானிக்கு
கற்பங்களேதுக்கடி குதம்பாய்
கற்பங்களேதுக்கடி 2

காணாமற்கண்டு
கருத்தோடிருப்பார்க்கு
வீணாசையேதுக்கடி குதம்பாய்
வீணாசையேதுக்கடி 3

வஞ்சகமற்று
வழிதன்னைக்கண்டோர்க்கு
சஞ்சலமேதுக்கடி குதம்பாய்
சஞ்சலமேதுக்கடி 4

ஆதாரமான
வடிமுடி கண்டோர்க்கு
வாதாட்டமேதுக்கடி குதம்பாய்
வாதாட்டமேதுக்கடி

நித்திரைகெட்டு
நினைவோடிருப்பார்க்கு
முத்திரையேதுக்கடி குதம்பாய
முத்திரையேதுக்கடி

தந்திரமான
தலந்தனினிற்போர்க்கு
மந்திரமேதுக்கடி குதப்
மந்திரமேதுக்கடி 7

சத்தியமான
தவத்திலிருப்போர்க்கு
உத்தியமேதுக்கடி குதம்பாய்
உத்தியமேதுக்கடி 8

நாட்டத்தைப்பற்றி
நடுவணை சேர்வோர்க்கு
வாட்டங்களேதுக்கடி குதம்பாய்
வாட்டங்களேதுக்கடி 9

முத்தமிழ்கற்று
முழங்குமெய்ஞ்ஞானிக்குச்
சத்தங்களேதுக்கடி குதம்பாய்
சத்தங்களேதுக்கடி 10

ச்சிக்குமேற்சென்
யர்வெளிகண்டோர்க்கு
இச்சிப்பிங்கேதுக்கடி குதம்பாய்
இச்சிப்பிங்கேதுக்கடி 11

வேகாமல்வெந்து
வெளியொளி கண்டோர்க்கு
மோகாந்தமேதுக்கடி குதம்பாய்
மோகாந்தமேதுக்கடி. 12

சாகாமற்றுண்டி
தனிவழிபோவோர்க்கு
ஏகாந்தமேதுக்கடி குதம்பாய்
ஏகாந்தயேதுக்கடி 13

அந்தரந்தன்னி
லசைந்தாடுமுத்தர்க்கு
தந்திரமேதுக்கடி குதம்பாய்
தந்திரமேதுக்கடி 14

ஆனந்தம்பொங்கி
அறிவோடிருப்பார்க்கு
ஞானந்தானேதுக்கடி குதம்பாய்
ஞானந்தானேதுக்கடி 15

சித்திரக்கூடத்தைத்
தினந்தினங்காண்போர்க்குப்
பத்திரமேதுக்கடி குதம்பாய்
பத்திரமேதுக்கடி 16

முக்கோணந்தன்னில்
முளைத்தமெய்ஞ்ஞானிக்குச்
சட்கோணமேதுக்கடி குதம்பாய்
சட்கோணமேதுக்கடி 17

அட்டதிக்கெல்லா
மசைந்தாடுநாதர்க்கு
நட்டணையேதுக்கடி குதம்பாய்
நட்டணையேதுக்கடி 18

முத்திபெற்றுள்ள
முயங்குமெய்ஞ்ஞானிக்குப்
பத்தியமேதுக்கடி குதம்பாய்
பத்தியமேதுக்கடி 19

அல்லலைநீக்கி
யறிவோடிருப்பார்க்குப்
பல்லாக்கேதுக்கடி குதம்பாய்
பல்லாக்கேதுக்கடி 20

அட்டாங்கபோக
மறிந்தமெஞ்ஞானிக்கு
முட்டாங்கமேதுக்கடி குதம்பாய்
முட்டாங்கமேதுக்கடி 21

வேகமடக்கி
விளங்குமெய்ஞானிகசு
யோகந்தானேதுக்கடி குதம்பாய்
யோகந்தானேதுக்கடி 22

மாற்றானைவென்று
மலைபோலிருப்போர்க்கு
பூத்தானமேதுக்கடி குதம்பாய்
பூத்தானமேதுக்கடி 23

செத்தாரைப்போலத்
திரியுமெஞ்ஞானிக்குக்
கைத்தாளமேதுக்கடி குதம்பாய்
கைத்தாளமேதுக்கடி 24

கண்டாரை நோக்கிக்
கருத்தோடிருப்பார்க்குக்
கொண்டாட்டமேதுக்கடி குதம்பாய்
கொண்டாட்டமேதுக்கடி 25

காலனைவென்ற
கருத்தறிவாளர்க்குக்
கோலங்களேதுக்கடி குதம்பாய்
கோலங்களேதுக்கடி 26

வண்காயமுண்டு
மிளகுண்டு சுக்குண்டு
உண்காயமேதுக்கடி குதம்பாய்
உண்காயமேதுக்கடி 27

மாங்காய்ப்பாலுண்டு
மலைமேலிருப்போர்க்கு
தேங்காய்ப்பாலேதுக்கடி குதம்பாய்
தேங்காய்ப்பாலேதுக்கடி 28

பட்டணஞ்சுற்றிப்
பலலே திரிவோர்க்கு
முட்டார்க்கேதுக்கடி குதம்பாய்
முட்டாக்கேதுக்கடி 29

தாவாரமில்லை
தனக்கொருவீடில்லை
தேவாரமேதுக்கடி குதம்பாய்
தேவாரமேதுக்கடி 30

தன்னையறிந்து
தலைவனைச்சேர்ந்தோர்க்கு
பின்னாசையேதுக்கடி குதம்பாய்
பின்னாசையேதுக்கடி 31

பத்தாவுந்தானும்
பதியோடிருப்பார்க்கு
உத்தாரமேதுக்கடி குதம்பாய்
உத்தாரமேதுக்கடி 32

குதம்பை சித்தர் பாடல் முற்றிற்று.

---







ஸ்ரீனிவாச பிரஸ், 66. கவரத்தெரு, சூளை—சென்னை.

# ஸ்தோத்திர புத்தகங்கள்.

| | அ. ப. |
|---|---|
| விஷ்ணு சகஸ்ர நாமம் | 12—0 |
| லக்ஷ்மி சகஸ்ர நாமம் | 8—0 |
| லலிதா சகஸ்ர நாமம் | 8—0 |
| சுப்பிரமணிய சகஸ்ர நாமம் | 8—0 |
| சிவ சகஸ்ர நாமம் | 8—0 |
| தேவிநித்திய பாராயணம் | 10—0 |
| ஸாயிபாபா பூஜாவிதி | 6—0 |
| கல்பத்திரியம் | 6—0 |
| ஸ்தோத்திர மஞ்சரி | 6—0 |
| யஜுர்வேத ஸந்தியா வந்தனம் | 4—0 |
| சாமவேத ஸந்தியா வந்தனம் | 4—0 |
| ரகுவீரகத்தியம் | 4—0 |
| ஆதித்ய ஹ்ருதயம் | 4—0 |
| லக்ஷ்மி அஷ்டோத்திரம் | 3—0 |